உ
தேவிசகாயம்

# ஜனகர்க்கும் சுகர்க்கும் சம்வாதம்

## நூல்.

மஹா தபசியாகிய சுகப்பிரம ரிஷியானவர், தன்பிதாவாகிய வேதவியாசரிடத்தி லுபதேசஞ் செய்துக்கொண்ட பிறகு, நாரதரிடத்திற் சர்வம் பிரமமென்னும் வாக்கியத்தையும், பிரமாவினிடத்திற் சாக்ஷியே பிரம்மமென்னும் வாக்கியத்தையும், தக்ஷணாமூர்த்தியிடத்திற் பாவாபாவாதீதமென்னும் வாக்கியத்தையும் உபதேசஞ் செய்துக்கொண்டும் நிச்சியம் வராததினால் தன்பிதாவினுத்தரவின்படி மிதுலாபுரியிற்போய் ஞான ஜனக மஹாராஜனிடத்தில் தன்வரவை யறிவிப்பித்தார். அவ்வரசனிவருடைய குணங்களைப் பலவிதமாகச் சோதித்தறிந்து ஆசனத்திலுட்காருவித்து உத்தம தபசியே, நீரார் சொல்லுமென்று கேட்டார்.

**விடை**: - சொரூபமென்றார்.

**வினா**:- சொரூப மெப்படியிருக்கு மென்றார்.

**விடை**: - சத்துமற்றுச் சித்துமற்று ஆனந்தமுமற்றிருக்கு மென்றார்.

**வினா**: - சத்தெது வென்றார்.

**விடை**: - தான் பிரமமென்று விசாரித்தபின் பிரமமென்கிற சத்தத்தையு மதினர்த்தத்தையும் விட்டதே சத்தென்றார்.

**வினா**: - சித்தெது வென்றார்.

**விடை**: - நாம் ஞானசொரூபமென்று நிச்சயித்தபின் அந்த நிச்சத்தையும் விட்டதே சித்தென்றார்.

**வினா**: - ஆனந்தமெது வென்றார்.

**விடை**: - இதுவே யாத்மா நந்தமென்றறிந்தனுபவித்ததையும் விட்டதே யானந்தமென்றார்.

**வினா**: - தொந்தமெது வென்றார்.

**விடை**: - தன்சொரூபத்தை யறிந்து மறந்து பின்னுங் குருவைத்தேடுவதே தொந்தமென்றார்.

**வினா**: - மோக்ஷ மெதுவென்றார்.

**விடை**: - தான் சொரூபமென் றறிந்த பின் அறிந்தோ மென்ற நினைவையும் விட்டதே மோக்ஷமென்றார்.

**வினா**: - அஞ்ஞான மெதுவென்றார்.

**விடை**: - சொரூபத்தை மறந்து தன் சுபாவத்தை யறியாததே அஞ்ஞான மென்றார்.

**வினா**: - ஆவரண மெதுவென்றார்

**விடை**: - தேகமே தானென்று சொரூபத்தை மறைத்ததே யாவரணமென்றார்.

**விடை**: - விக்ஷேப மெதுவென்றார்.

**வினா**: - தன்னகத்தைத் தானென் றிருப்பதே விக்ஷேப மென்றார்.

**வினா**: - பரோக்ஷ மெதுவென்றார்.

**விடை**: - குருவினாலும், சுருதியினாலும் சொரூபத்தை யறிவதே பரோக்ஷமென்றார்.

**வினா**: - அபரோக்ஷ மெதுவென்றார்.

**விடை**: - சொரூபமாத்திரமாய்ச் சுவா நுபவமா யிருப்பதே யபரோக்ஷமென்றார்.

**வினா**: - அநித்த நிவர்த்தி யெதுயென்றார்.

**விடை**: - சாத்திரமுகமாய்க் கேட்டுச் சத்துமாத்திரமா யிருப்பதே யநித்த நிவர்த்தி யென்றார்.

**வினா**: - ஆநந்தவாக்கி யெதுவென்றார்.

**விடை**: - சகலமு நிவர்த்தியாகிச் சுகமாத்திரமா யிருப்பதே யானந்தவாக்கி யென்றார்.

**வினா**: - ஞானத்திற் கதிகாரியார் யென்றார்.

**விடை**: - தன்னைச் சீவனென்றெண்ணி மோக்ஷம் வேண்டுமென்கிறவன திகாரியென்றார்.

**வினா**: - இருதயக்கிரந்தி யெதுவென்றார்.

**விடை**: - தன் கழுத்தி லாபரணமிருக்கையி லதைத் தேடுகிறதுபோலத் தன்னை விசாரியாமல் தேடுகிறதே யிருதயக் கிரந்தியென்றார்.

**வினா**: - சம்சார மெதுவென்றார்.

**விடை**: - குரு சுருதியனுபவங்களாலறிந்து மறியாததே சம்ஸாரமென்றார்.

**வினா**: - சுகமெதுவென்றார்.

**விடை**: - தொய்தவிருத்தியை முயல் கோட்டைபோலொத்துக் கொள்ளுவதே சுகமென்றார்.

**வினா**: - துக்க மெதுவென்றார்.

**விடை**: - தான் சின்மயனென்றும், பரிபூரணனென்றும் பொன்விலங்குபோல் வருகிற அத்தொய்தவிருத்தியே துக்க மென்றார்.

**வினா**: - விஷய மெதுவென்றார்

**விடை**: - விசாரித்து நித்திய சொரூபமா யிருக்கிறவனா னென்று எப்பொழுது மறிகிறதே விஷயமென்றார்.

**வினா**: - அவ்விஷய மெதுவென்றார்.

**விடை**: - சங்கற்பத்தை விட்டு அறிவுமறந்து வஸ்துவாய் தானே யிருப்பது அவ்விஷ யமென்றார்.

**வினா**: - வாய்திறப்ப தெதுவென்றார்.

**விடை**: - தான் சொரூபமாத்திரமா யிருந்தாலுஞ் சத்சீடனுக்கு ஆசாரியர் பரம்பரை விளங்கவேண்டி யநுபவித்ததை யுபதேசிப்பதற்கு வாய்திறப்பதே வாய் திறப்பது வென்றார்.

**வினா**: - மௌனமெது வென்றார்.

**விடை**: - தொய்தவிருத்தியைச் சநிப்பியாமலிருப்பதே மௌனமென்றார்.

**வினா**: - குருயாரென்றார்.

**விடை**: - சங்கற்ப விகற்ப்பமற்று அகண்ட சச்சிதானந்த பரிபூரணமா யிருப்பதெது வோ அதுவே குருவென்றார்.

**வினா**: - சீடனாரென்றார்.

**விடை**: - தானாத்மாவென்று விசாரித்து நிச்சயம் பண்ணி மறுபடியும் தொய்த விருத்தி நடவாமல் லயித்தவவித்தை எதுவோ அதுவே சீடனென்றார்.

**வினா**: - சீடன் கேட்கப்பட்ட தெதுவென்றார்.

**விடை**: - குருமூலமாய்க் கேட்டோமென்கிற அகங்காரஞ் சநிப்பிக்காததே கேட்கப் பட்டதென்றார்.

**வினா**: - சீடன்கண்ட தெதுவென்றார்.

**விடை**: - வேதாகமங்களாற் காணாததாயுஞ் சர்வத்தையுங் கண்டுகொண் டிருப்பதாயு மிருப்பதெதுவோ அதுவே சீடன் கண்டதென்றார்.

**வினா**: - காணாததெது வென்றார்.

**விடை**: - நான் நீ அது இது என்கிற விருத்தியானதுதானாத்மாவென்று விசாரியாத குற்றந்தான் காணப்படு மதுவே காணாத தென்றார். :

**வினா**: - போனதெது வென்றார்.

**விடை**: - தாம் பிரமமென்று விசாரித்தபின் தூங்குகிறவன் கைப்பொருள்போற் போகிற சங்கற்ப விருத்தியே போனதென்றார்.

**வினா**: - போகாத தெதுவென்றார்.

விடை : - விசாரித்து இதுவல்ல அதுவல்ல என்று நின்ற சேடமே போகாதென்றார்.

**வினா**: - புசித்ததெது வென்றார்.

**விடை**: - தேசகால தேகசுக துக்கங்களாற் புசித்ததெதுவோ அதுவே புசித்ததென்றார்.

**வினா**: - புசியாத தெதுவென்றார்.

**விடை**: - விசாரியாததினால் சுகமிது துக்கமிது நான் முத்தனென்கிற வாசனையோடு கூடிக்கொண்டிருக்கிற தெதுவோ அதுவே புசியாததென்றார்.

**வினா**: - பிறவியெது வென்றார்.

**விடை**: - பிறந்தோ மென்கிற சங்கற்பத்தைவிட்டு விசாரித்துப் பிறக்கவில்லை யென்கிற நிச்சயமுதிக்கிறதே பிறவி யென்றார்.

**வினா**: - மரணமெது வென்றார்.

**விடை**: - பிரமமென்று விசாரித்த நிச்சயமானது பிரமத்தில் லயித்ததே மாணமென் றார்.

**வினா**: - நல்லதெது வென்றார்.

**விடை**: - நானே சொரூபமென்று விசாரித்த நிச்சயமானது நுனிநாக்கிப்போட்ட சர்க்கரைபோலக் கரைந்து லயித்ததே நல்லதென்றார்.

**வினா**: - பொல்லாத தெதுவென்றார்.

**விடை**: - விசாரித்தபின் வாசனையோடுகூடி விசாரித்தோமென்கிறதே பொல்லாத தென்றார்.

**வினா**: - பந்து யாதென்றார்.

**விடை**: - தன்னுடைய சுகத்தில் தானே கல்லியாணமாய்த் தானதுவாயிருப்பதே பந்துவென்றார்.

**வினா**: - அபந்து யாதென்றார்.

**விடை**: - தன்னுடைய சுகமுந் தானும் வேறாகவிருந்து வாசனையினால் நானல்லவென்று எலும்பு கவ்வின நாய்போல விசாரியாததுதே பந்துவென்றார்.

**வினா**: - சடமெது வென்றார்.

**விடை**: - இத மகித மிவ. ரவரென்று பேதமாகச் சநிக்கிறதே சடமென்றார்.

**வினா**: - அசட மெதுவென்றார்.

**விடை**: - தானென்கிற அறிவும் அறிவுக்குளறிவுமற்றிருந்ததே அடசமென்றார். :

**வினா**: - வியாதி யெதுவென்றார்.

**விடை**: - தான் பிரமமென்கிறதை விசாரியாத காலத்தில் தான் சீவனென்று வேறாக ப்பாவிக்கிறதே வியாதியென்றார்.

**வினா**: - ஔஷத மெதுவென்றார்.

**விடை**: - தான் சொரூபமென்கிற சத்தமும் அனுபவிக்கிறோமென்கிற பாவனை யுமற்று ஊமையன் கண்ட கனாப்போலத் திருப்தி யடைந்திருப்பதே யௌஷத மென்றார்.

**வினா**: - காரணசரீர மெதுவென்றார்.

**விடை**: - தன்னைத்தானறியாமல் லகமகமென்று கொண்ட விருத்தியிருக்கிற சமயமே காரனைசரீரமென்றார்.

**வினா**: - அகமகமென்றிருந்த விருத்தி வஸ்துவிலயித்து அற்பவாசனையோடே யிருக்கிற சங்கற்பமாத்திரமே சூட்சும சரீரமென்றார்.

**வினா**: - தூலசரீர மெதுவென்றார்.

**விடை**: - அகமகமென்ற விருத்தியானது பருத்து அற்ப வாசனையோடிருந்து திடவாசனையோடு கூடியிருந்த சங்கற்பமே தூலசரீரமென்றார்

.

ஜனகமஹா ராஜாவானவர் இவ்விதமாகிய உத்தரங்களைக் கேட்டு மிகுந்த சந்தோஷமடைந்து அநந்தங்கோடி நமஸ்காரம் பண்ணினவுடன் சுகப்பிரம ரிஷியான வர் நான் சில சந்தேகங்கள் தீர்த்துக்கொள்ள வந்தேன் அவைகளைத் தாங்களே கேட்டு ஒப்புக்கொண்டபடியினாலே அச்சந்தேகங்களற்று மிகுந்த ஆனந்தமடைந்தே னென்று சொல்லி சல்லாபமாக இருவரும் பேசிக்கொண்டிருந்தார்கள்.

முந்திய வடமொழி வாதிஷ்டத்தில் இந்தச் சுதசம்வாத விரிவைக்காணலாம்.

**ஜனகர்க்கும் சுகர்க்கும்**

## சம்வாதம்

**முற்றிற்று.**